


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
32nd year
of Publication
29—1—1967


### தமிழகத் தேர்தல்

# வாக்காளர் கண்ணோட்டம்

**சாலை இளந்திரையன்**

**1967** பிப்ரவரிப் பொதுத் தேர்தலில் தமிழகம் ஒரு புதிய அனுபவத்தை எதிர்நோக்கி நிற்கிறது. பல கட்சிகளை இணைத்த கூட்டணியும் காங்கிரசும் பல இடங்களில் 'ஒத்தைக்கு ஒத்தை'யாக மோதிக் கொள்வது தமிழகத்தில் இதுவே முதல் தடவை.

கட்சி அரசியல் குடியாட்சியில் இத்தகைய நேருக்கு நேர் மோதல் விரும்பத்தக்கதே. ஆனால், இத்தகைய மோதல் கொள்கை அடிப்படையில் நடப்பதே விரும்பத்தக்கது. தமிழகத்தில் நாம் காண்பது என்ன? இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள், 'அவர்களைவிட நாங்களே சுத்தமான கம்யூனிஸ்டுகள்' என்று ஒரு காலத்தில் சொல்லிவந்த தி. மு. க. வினர் இவர்களைக் கண்டாலே காதவழி ஓடக்கூடிய சுதந்திரா, 'பார்வர்டு பிளாக்' என்ற பெயரில் உள்ள ஒரு சாதிக்கட்சி, மதத்தின் மீதே உண்டு உறங்கி இருந்து நடந்து முடியப்போவதாகச் சொல்லும் முஸ்லிம் லீக், உலகத் தமிழ்ப் பகுதிகள் அனைத்தையும் ஒன்றாக ஒட்டிப் பிடிக்க முயன்று அலுத்துவிட்ட 'நாம் தமிழர்', காங்கிரசுக்கும் எமக்கும் கொள்கை அளவில் பெரிய வேறுபாடு இல்லை' என்று சொல்லி வந்து தேர்தல் காற்றில் திடீரென என்னவோ ஆகியுள்ள தமிழரசுக் கழகம் இத்தனையும் சேர்ந்துள்ள கூட்டணி விநயமான அரசியல் விமர்சனத்துக்கு உரியதாக இல்லை என்பதை மிகுந்த வருத்தத்தோடு குறிப்பிட வேண்டியுள்ளது.

சென்னை நகராண்மைக் கழகத்திலும் வேறு சில நகராட்சிகளிலும் பதவி வகித்து, அதனால் ஏற்பட்ட சவுகரியங்களை அனுபவித்த ஆசையில் ஆட்சி நாற்காலியைப் பிடிக்க முனைகிறது தி. மு. கழகம். சிறந்ததோர் சமுதாயச் சீர்திருத்த இயக்கமாக விளங்கிவந்த தி. மு. கழகம், தன் இலட்சியங்களை எல்லாம் சிறுகச் சிறுகக் கைவிட்டு, ஓர் அரசியல் கட்சியாகி இருக்கிறது. தனது கொள்கைகளையே சிறிது சிறிதாகத் 'தியாகம்' செய்துள்ள ஒரு கட்சி பதவிக்கு ஆசைப்படுவதை நாம் தவறு என்று தடுக்க முடியுமா?

இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள் பொதுவுடைமைவாதிகளுக்குள்ளேயே தீவிரவாதிகள். விரைவிலேயே நாட்டில் பொதுவுடைமை ஆட்சி ஏற்படவேண்டும் என்று துடிப்பவர்கள். வலுவாக உள்ள கட்சியை வலுவில்லாத பல கட்சிகளோடு சேர்ந்து ஒழிப்பதும், பின்னர், முகம்மது கோரி பாணியில், தன்னோடு சேர்ந்திருந்தவர்களையே ஒவ்வொருவராக ஒழித்துக் கட்டிவிட்டு ஆட்சிக் கடிவாளத்தைத் தன் கையில் பிடித்துக் கொள்வதுமே இடதுசாரியாரின் திட்டம். எனவே அவர்கள் இந்த அணியில் சேர்ந்திருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

முஸ்லிம் லீக் தனது கொடியின் கீழ் திரளும் இஸ்லாமிய மக்களைப் பழைய மூடத்தனத்திலே கொண்டு செல்ல விரும்பும் ஒரு சிறுபான்மையர் கட்சி. சிறுபான்மையர் எப்போதுமே, தங்கள் சுயநலன் ஒன்றையே கருதுவார்கள்; அதற்குச் சிறிது பழுது ஏற்படுவதாக நினைத்தால், வேறொருவரிடம் சென்று ஒட்டிக் கொள்வார்கள்.

எனவே, 'மதச்சார்பற்ற அரசாங்கம்', இந்திய மக்கள் எல்லோருக்கும் ஒரேவிதமான சட்டம், என்பன போன்ற காங்கிரஸ் குரல்களைக் கேட்டு, சுதந்திரத்துக்குள்ளேயே ஒரு 'குட்டிச் சுதந்திரம்' விரும்பும் முஸ்லிம்களின் கட்சி எதிரணியிடம் ஓடி ஒதுங்குவதிலும் வியப்பில்லை.

தங்கள் சாதி புறக்கணிக்கப்படுகிறது, தங்கள் தலைவருக்கு மகுடம் சூட்டப்படவில்லை என்னும் எண்ணங்களில் கொதிப்படையும் பார்வர்டு பிளாக்கு நாம் தமிழர் முதலியோர், தங்கள் எதிரிக்கு எதிரியைத் தேடிக் கட்டித் தழுவிக் கொள்வதும் நடக்கக் கூடியதே.

காங்கிரசுக்காக உழைத்தும் காங்கிரசால் வளர்ந்தும் எல்லை மீட்சிப் போரில் விழுப்புண்பட்டும் பெருமை ஏந்திய தமிழரசுக்கழகம், திராவிட இயக்க ஒழிப்பு மாநாடு நடத்திய தமிழரசுக் கழகம் தன் மார்பில் உதய சூரியன் முத்திரையை ஏற்றது வியப்பாகவே இருக்கிறது. மொழிக் கொள்கையிலும் பொருளாதாரக் கொள்கைகளிலும் தி. மு. க. வினின்று பெரிதும் மாறுபடுகின்ற சுதந்திராக் கட்சி, 'எங்களிடம் கொள்கை பலம் இருக்கிறது, உங்களிடம் ஆள்பலம் இருக்கிறது' என்று கூறிக் கொண்டு தி. மு. க. வுடன் போய் வலுக்கட்டாயமாக ஒட்டிக்கொள்வதும் ஆச்சரியமே. தமது முதல் எதிரிகளின் முரட்டுப் பிள்ளைகளாகிய இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளுடன் ஆச்சாரியார் 'சிரியாசனத்து' அமர்ந்ததும் அரசியல் நெறியில் எந்த விளக்கத்துக்கும் சரிப்பட்டுவரவில்லை.

[ 7-ம் பக்கம் பார்க்க ]

# ''செய்யாதன... ...செய்யோம்''



*************************************************

## 5. கர்மயோகி ராமண்ணா!

'நீ உன் கடமையைச் செய்—பலனை எதிர்பாராதே!' என்ற உபதேசத்தை எதிர்ப்படுகிறவர்களிடமெல்லாம் சொல்லிக்கொண்டிருப்பவர் கர்மயோகியல்ல—(அவர் வேண்டுமானால் 'மர்மயோகியாக' இருக்கலாம்) யாரிடமும் எதுவும் பேசாமல் எப்போதும் எதையாவது செய்துகொண்டிருக்கிறவன் தான் கர்மயோகி!

மன்னார்குடியில் என் வடமொழி ஆசிரியப் பெருமானையும்—என்னுயிர் நண்பரையும் சந்தித்துவரச் சென்றிருந்தேன். ஆசிரியர் என்றால் சர்க்காரிடம் மாதச் சம்பளம் வாங்கிக்கொண்டு மாணவர்களிடம் பயப்படுகிற ஆசிரியர் அல்ல—தார்மிக சிந்தனையுள்ள தனவந்தர் ஒருவரின் அறக் கட்டளையிலிருந்து வெகுமதி பெற்றுத் தம் போதனை முறையாலும் பழகுமுறவுணர்வாலும்—எங்கள் உடலுழைப்பையும் உள்ளுணர்வையும் தம்பால் திருப்பிக் கொள்ளும் வல்லமை படைத்த நல்லாசான் அவர்! எனக்கு இளையவரான ஒரு நண்பர் அங்கே அவரிடம் (தந்தை) தாம் பெற்ற வடமொழிக் கல்வியை கதாகாலட்சேப முறையில் மெருகூட்டி அவர் கண்ணெதிரே அரங்கேற்றும் வைபவத்தையும் கண்டேன்!

மற்றொரு நண்பர் தாம் குடியிருக்கும் பகுதியிலுள்ள பிற குடும்பத்தினர் அனைவரையும் ஜாதிமத பேதம் பாராட்டாமல் அருட்பணியில் ஈடுபடுத்திக் காந்திஜி கனவுகண்ட சமதர்ம சமுதாய மறுமலர்ச்சிக்குப் பாடுபடுவதையும் கண்டேன். அங்கே அமைந்துள்ள ராமமடம் ஒன்றின் சார்பில் 'ராதா கல்யாணம்' எனும் திருவிழா நடைபெற்றது.

பக்திப் பாடல்கள் பல்வேறு மொழிகளிலும் பாடியும்—ஒரு சில கட்டங்களில் வளையணியும் பெண்களுக்கே உரியவை என்று நான் கருதிய கும்மி-கோலாட்டம்-முதலியவைகளை 'வாட்ச்' அணிந்த வீர புருஷர்கள் நடத்தியும் என்னை மெய்சிலிர்க்க வைத்தார்கள்.



மீரா சொன்னாற்போல் ஆண்டவன் முன்னிலையில் ஆண்-பெண் என்ற பேதமே மறந்து அனைவரும் பெண்ணாகவே காட்சி தந்தார்கள்!

ஆனால் நான் சொல்ல வந்தது கர்மயோகி ராமண்ணா எனும் ரெண்டுங்கெட்டான் மனிதன்—பெரியவனுமல்ல சிறியவனுமல்ல—நானூறு பேர் கலந்துகொள்ளும் அந்த நிகழ்ச்சி மன்றத்தில் அவன் பம்பரமாகச் சுழன்று கொண்டிருந்தான். சைக்கிளில் பறந்தான்—அனுமான் சஞ்சீவி மலையைச் சுமந்தாற்போல் இருகைகளிலும் சவுக்கு விறகுகளைச் சுமந்தான்—அழுகிற குழந்தைகளைச் சமாதானம் செய்தான்—குழந்தைகள் கோஷ்டியொன்றைவைத்துக்கொண்டு விடியற்காலையிலும் அஸ்தமிக்குமுன்பும் 'திவ்ய நாமம்' எனும் இறைவனின் திருநாமத்தைப் பஜனைப் பாடல்களில் பாடிப் பாடவைத்தான்! தண்ணீர் கொண்டுவந்தான்!... தாம்பூலம் வழங்கினான்—கூப்பிடுகிறவர்கள் முன்னிலையிலெல்லாம் உடனே போய் நின்றான். இப்படி ஒருவன் பயன் கருதாமல் இயங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு வியந்தேன்.

என்னால் உட்கார்ந்தால் எழுந்திருக்க முடியாது—எனவே கைக்கருகே 'பெட் ஸ்விச்' வேண்டும்.

புத்தகங்களும் வெற்றிலைப் பாக்குப் பெட்டியும் கையில் கிடைக்கும்படி அருகிலிருக்க வேண்டும். கதவை யாராவது தட்டினால் அதைத் திறக்க யாராவது போய்வர வேண்டும்!

—இத்தகைய 'சோம்பேறி' வாழ்க்கையைச் சொந்த முறையில் நடத்திக் கொண்டு வெளியில் எல்லோரிடமும் 'சமூக சேவை' செய்வதாகப் பொய்ப் பாராட்டுப் பெறும் நான் அந்தக் கர்மயோகியைக் கண்டு வியந்ததில் வியப்பென்ன!

எல்லோரும் இரவு எட்டரை மணிக்கு பல்வேறு வகையான சித்ரான்னங்களைச் சுவைக்கும் விருந்திலமர்ந்திருந்தோம் — 'ராமண்ணா எங்கே?... இலையைப் போடச் சொல்லு' என்ற குரலுக்குப் பதிலாக 'அவன் மயக்கமாக விழுந்துவிட்டான்' என்ற விளக்கம் கிடைத்து நானும் எழுந்து சென்று பார்த்தேன்—முகத்தில் ஜலத்தைத் தெளித்தும் விசிறியும்—குடிக்கக் காபி-சோடா-முதலியவைகளை வைத்துக்கொண்டும் எல்லோரும் 'ராமண்ணா! ராமண்ணா!' என்று கதறினார்கள்.

ராமண்ணா காலைமுதல் சாப்பிடவில்லையாம்—அவனிடம் வேலை வாங்க மட்டுமே பழக்கப்பட்ட பெரியவர்கள் அவனைச் சாப்பிடச் சொல்லவில்லையாம்—அவன் கையில் இருபது முப்பது ரூபாய்க்கு மேல் செலவுகளுக்காகக் கொடுத்திருந்தும் அவன் வெளியில் காசு கொடுத்து ஒரு கப் காபி கூடக் குடிக்கவில்லையாம்.

T A D A.—வாங்கிக்கொண்டு கீழே வேலைபார்க்கும் ஏழை என். ஜி. ஓ. பில்லில் விருந்துண்ணும் லோக சேவகர்களான இலாகா அதிகாரிகளும், விருந்துண்ணும் தொழிலேயே—விரைந்தோடும் வாகனங்களின் உதவியால் பல்வேறு ஊர்களில் அரைமணிக்கொரு தடவை—நீண்ட சொற்பொழிவுகளிடையே நடத்துகிறவர்களும் சிந்திக்கவேண்டும்!

—ஐயோ!... கோதண்டு எழுப்ப வந்துவிடுவான்—இதோ கோயிலுக்குப் போய்வருகிறேன்.

(அடுத்த இதழில் முடியும்)

# வாக்குச் சீர்திருத்தம்

மீண்டும் ஒரு பொதுத் தேர்தல் வந்துவிட்டது. 1967 பிப்ரவரி மாதத்தில், நாம் எல்லோரும் நமது வாக்குகளை வழங்கி, நமக்காக நாடாளும் தொண்டர்களைத் தேர்ந்தெடுக்கப் போகிறோம்...

மக்கள் பெருவாரியாகக் கலந்துகொள்ளும் நிகழ்ச்சிகள் நமக்குப் பழக்கமானவைகளே. ஆண்டுதோறும் வரும் பண்டிகைகளையும் தேர்த்திருவிழாக்களையும் நாம் கொண்டாடி மகிழ்கிறோம். இந்த விழாக்களின் நோக்கங்கள் எப்படி இருந்தாலும், அவைகளின் போது எல்லோருக்கும் புத்தாடையோ, புது பண்டமோ, புதிய அன்பளிப்போ கிடைக்கிறது. எனவே, இவைகளில் ஏதாவது ஒன்றைக் கருதி அந்தப் பண்டிகைகளையும் விழாக்களையும் நாம் ஆவலோடு எதிர்பார்க்கிறோம்.

இந்தப் பழக்கம் நமது பொதுத் தேர்தலையும் ஒரு 'வரும்படி விழா'வாகக் கருதும் போக்கைப் பலரிடம் ஏற்படுத்தியிருக்கிறது. வாக்குச் சீட்டுக்குப் பணம் கொடுப்பதும், வாக்காளர்களுக்கு விருந்து நடத்துவதும், இன்னும்பல சவுகரியங்களை வழங்குவதும் பல இடங்களில் உள்ளதாகக் கட்சிக்காரர்கள் (தேர்தல் முடிந்ததும்) நம்மிடமே வந்து சொல்லுகிறார்கள். ஆமாம், கொடுத்தவர்கள் சொல்லுகிறார்கள்: வாங்கியவர்களிடமே வந்து சொல்லுகிறார்கள்!

திண்பண்டம் கொடுத்துச் சிறுபிள்ளைகளை ஏமாற்றுவது போல, ஏதோ கொடுத்து நம் வாக்குரிமையைக் கட்சிக்காரர்கள் பெற முடிகிறது என்றால், அது நமது வளர்ச்சியின்மையை மட்டுமல்ல, பொறுப்பின்மையையும் காட்டுகிறது. அதன் மூலம், நமது வாக்குரிமை பெற்று நாடாள வருகிறவர்களுக்கு நாம் அடிமைகளாகிறோம் என்பதை நாம் ஏனோ உணரவில்லை. நமது ஆதரவுக்குப் பதிலாகப் பணமோ பொருளோ தந்துவிட்ட ஒரு வேட்பாளர் பிறகு நமக்காகப் பணியாற்ற வேண்டுமென்ற கட்டாயம் என்ன இருக்கிறது? இதனாலேயே, பணம் செலவு செய்து (தேர்தலில்) வெற்றி பெற்றவர்கள், செலவு செய்த பணத்தை வட்டியும் முதலுமாக எப்படியாவது திரட்ட முயலுகிறார்கள். ஆமாம்; நாம் வாங்கிய சிறிய லஞ்சம் அவர்களைப் பெரிய லஞ்சக்காரர்களாக்கிவிடுகிறது.

வாக்குகளை நாம் வாங்கும் விலை, வேறு பல கீழ்மைகளுக்கும் வித்திடுகிறது. தேர்தல் என்றதுமே நாணயமானவர்களும் பணக்காரராக இல்லாத தொண்டர்களும் ஒதுங்கிக் கொள்ளுவார்கள்; தேர்தலை (பணம் செலவு செய்து) ஒரு வியாபாரமாக நடத்தக் கூடியவர்களே தேர்தலில் குதிக்கிறார்கள்.

பார்க்கிறோமே: ஒவ்வொரு கட்சியின் வேட்பாளர் பட்டியல் வெளிவந்ததும், அக்கட்சியில் உள்ள பொறுப்பு வாய்ந்தவர்களே, 'தகுதியானவர்கள் இப்பட்டியலில் பெருமளவு இடம் பெறவில்லை' என்று அறிக்கை விடுகிறார்கள். இதற்குக் காரணங்கள் இரண்டு: ஒன்று தகுதியானவர்கள் கட்சியிலேயே மிகுதியாக இல்லை; மற்றது, கட்சியில் தகுதி வாய்ந்தவர்கள் இருந்தும், அவர்கள் பணம் செலவு செய்து வெற்றி பெறக்கூடிய வசதியாளர்களாக இல்லை.

இதெல்லாம் எதைக்காட்டுகிறது? வாக்காளர்களாகிய நமது போக்கைக் கண்டு நல்லவர்கள் அஞ்சி ஒதுங்குகிறார்கள் என்பதைத்தானே காட்டுகிறது? இதே போக்கு நீடித்தால் நாட்டின் நிலை என்ன ஆகும்? எப்படியாவது பணத்தைச் சேர்த்து வைத்திருப்பவர்கள் நம்மை விலைக்கு வாங்கி, அரசியலையும் ஒரு இலாபகரமான வியாபாரமாக நடத்தத் தொடங்கிவிடுவார்கள்.

நமது எதிர்காலம் இப்படி ஆவதைத்தான் நாம் விரும்புகிறோமா? அந்நியரிடமிருந்து பெற்ற விடுதலையைப் பணக்காரர்களிடம் அடகு வைப்பதுதான் நமது எண்ணமா? உரிமை வாழ்வு, நல்லாட்சி, அதன் நிழலில் வளர்ந்து செழிக்கும் கலைகள் என்பவை நமக்கு வேண்டவே வேண்டாமா?

இவை, இன்று, வாக்காளர்களாகிய நம் சிந்தனைக்குரிய கேள்விகள். அரசியல் கட்சிகளையும் ஆட்சியையும் சீர்திருத்திச் செம்மைப்படுத்தும் ஆற்றல் நம் கையில் இருக்கிறது. அதைப் பயன்படுத்தாமல் விட்டுவிட்டு, 'லஞ்சம் வாங்குகிறார்களே! நல்லாட்சி நடத்தவில்லையே! நாட்டை வளர்க்கவில்லையே!' என்று நமக்குள்ளே, கூடிக்கூடிப் பேசுகிறோம். நியாயமா? வாசற்படியிலே போய் நாமே மோதிக்கொண்டு, 'வாசற்படி தலையில் இடித்துவிட்டது' என்றுதான் சொல்லிக்கொண்டே இருக்கப் போகிறோமா?

நின்று சற்று நிதானிப்போம்: நமது நாடு விடுதலை பெற்ற இந்தியா. இதிலே தேர்தலுக்கு நிற்போர் அனைவரும் நம்முடையவர்களே. அந்நியர் யாரும் இல்லை. அந்நியக் கொள்கை மயக்கிலே கிடக்கின்ற சிலரும், நாளடைவில் மயக்கம் தெளிந்துவிடப் போகின்ற நம்மவர்களே. ஆதலால், நாட்டாட்சியை நாம் எந்தக் கட்சியிடம் ஒப்படைக்கப் போகிறோம் என்பது முக்கியமல்ல; எல்லாக் கட்சிகளிலுமே நல்லோரும் பொல்லாரும், தகுதி உள்ளோரும் தகுதி இல்லாரும் இருக்கிறார்கள், நமக்குக் கொடிகளும் சின்னங்களும் முக்கியமல்ல; கொள்கை பிடிப்பும் நல்ல நோக்கும், சிறந்த தகுதியும் உடையவர்களே முக்கியம். அத்தகையவர்களையே நாடாளும் நம் தொண்டர்களாக நாம் தேர்ந்தெடுக்க வேண்டும்.

'ஒவ்வொரு கட்சியிலும் உள்ள நல்லவர்களையே தேர்ந்தெடுத்தால், எந்தக் கட்சிக்குமே பெரும்பான்மை கிடைக்காவிட்டால் என்ன செய்வது?' கட்சி அரசியலில் இது நியாயமான கேள்விதான். ஆனால், இப்படி ஒரு சிக்கல் ஏற்பட்டால்தான், இன்று மூண்டு நிற்கும் தாழ்நிலை நீங்கும். தகுதி வாய்ந்தவர்கள் எந்தக் கட்சியிலிருந்தாலும் அவர்களையே நாம் தேர்ந்தெடுப்போம் என்று ஆகிவிட்டால், நல்லோரும் பெரியோரும் கட்சிகளில் சேர்ந்து நாடாள வருவார்கள்; கட்சிக்காரர்களும் நல்லவரையே வேட்பாளராக நிறுத்துவார்கள். அரசியல் கட்சிகளையும் நாட்டாட்சியையும் தூய்மைப் படுத்த இது ஒன்றே வழி.

இந்த வாய்ப்பு நமக்கு ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் கிடைக்கிறது. அந்த வாய்ப்பு இப்போது வந்திருக்கிறது. அதை நாம் சரியானபடி பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

'கலகம் பிறந்தால்தான் நியாயம் பிறக்கும்; குழப்பம் விளைந்தால்தான் அமைதி விளையும்; வெள்ளம் புரண்டெழுந்தால்தான் செத்தையும் அழுக்கும் சென்றொழியும்.' இதுதான் கடந்துபோன மனிதக்குல வரலாறு; இதுதான் மனித மன இயல்பின் போக்கு. இதை மறுத்துச் 'சாக்குருவி வேதாந்தம்' பேசிக்கொண்டிராமல், மக்கள் சக்தியின் வலுமிக்க சின்னமாகிய வாக்குச்சீட்டைக்கொண்டு நாம், நம்மையே செப்பனிட்டுக் கொள்ள வேண்டும்.

—சாலை இளந்திரையன்




மலர் : 32 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1967
இதழ் : 10 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஜனவரி:29

# ஜனதிபதியின் செய்தி

குடியரசு நாளையொட்டி பாரத ஜனதிபதி நாட்டு மக்களுக்கு விடுத்துள்ள செய்தியை ஒவ்வொருவரும் ஊன்றி உணர வேண்டும். நீதி, சமத்வம் ஆகிய நோக்கங்களின் அடிப்படையில் தான் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்டல் வேண்டும். அரசியல் நிர்ப்பந்தங்களை உண்டாக்குவதன் மூலம் அல்லது மிரட்டல்கள் மூலம் இதை சாதிக்க முயலக் கூடாது. அற்ப விஷயங்களைப் பெரிய பிரச்னைகளாக்கிவிட்டும், ஒருவர் அல்லது ஒரு சிலர் தங்கள் விருப்பத்துக்கு நாட்டைப் பணியவைக்க முயன்று உயிர்த்தியாகம் உண்ணு நோன்பு போன்ற நெருக்கடிகளைக் கொண்டுவருவதும் அரசாங்கத்தை வலிவிழக்கச் செய்துவிடும். இந்த நிலை நீடித்தால் நாட்டில் பெரும் புரட்சி உருவாகிவிடும். அப்படி ஏற்பட்டால் சாதாரண குடியுரிமைகள் கூட இருந்த இடம் தெரியாமல் போய்விடக்கூடிய அபாயம் வரும். கட்டுப்பாடும் தன்னடக்கமும் நாட்டன்பும் ஒருமைப்பாடும் குலைந்து ஜனநாயகமே அழியும்படியான மனப் போக்கு நாட்டில் பரவி வருவது நல்லதல்ல.

இதை வலியுறுத்தியுள்ள ஜனதிபதியின் உரை ஆழ்ந்த பொருளுடையது. நாட்டன்புகொண்ட ஒவ்வொரும் சிந்திக்க வேண்டிய அவசரமான - அவசியமான கருத்து இது. உலகின் கண்முன் நமது பொறுப்பற்ற போக்கு பாரம்பர்யமாக நாம்படைத்துள்ள பெருமைகளையெல்லாம் ஒளியிழக்கச் செய்து வருவதையும் அவர் மிகுந்த மனவேதனையுடன் எடுத்துக் காட்டியுள்ளார். பாரத மக்கள் தங்கள் நிலையை எண்ணிப் பார்க்க வேண்டியது மிகவும் இன்றியமையாதது.

# அரியக்குடியும் மறைந்தார்

கடந்த சில ஆண்டுகளில் பெரும்பசி கொண்டவனாக அலையும் காலன் நமது தேசீயச் செல்வங்களான இசைவாணர்களின் வரிசையில் சௌடையாவைத் தொடர்ந்து அரியக்குடியை பறித்துக் கொண்டுவிட்டான். கர்நாடக இசையின் முனிபுங்கவர்களாக விளங்கிய மூவரின் சிறப்பையும் பக்தி பாவனைகளின் பரவசத்தையும் வாரிவழங்கி வந்த பெரும் சிகரம் சாய்ந்துவிட்டது. ஒலித்திரன் எத்துணை இன்பங் கொடுத்த போதிலும் என்னாளும் மறையாது ஒலித்துக்கொண்டிருக்கும் நியதி அதற்குக் கிடையாது நவீன விஞ்ஞானம் இசையை வாங்கிப் பாதுகாத்து நமக்கு வேண்டிய போது வழங்கும் வல்லமை பெற்றிருப்பது ஒரு பெரும் வாய்ப்பு. அதை எண்ணி நாம் ஆறுதல் பெருவோம். ஆயினும் இத்தகைய பேரிழப்பால் விளையும் நமது துயர் ஆற்றொணாதது.

—

# செய்திக் கோவை

## வேகமாக கார் ஓட்டும் பெண்

மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த 20 வயது யுவதி ஸ்பைன் ஹோல்கே மோட்டார் பந்தயத்தில் மிகத் திறமைவாய்ந்த நிபுணர். மணிக்கு 200 கிலோ மீட்டர் வேகத்தில் அபாரமாக வண்டியை ஓட்டக்கூடியவர் இவர். இவர் தன் 14வது வயதில் மோட்டார் ஓட்டக் கற்றுக்கொண்டார். பல மோட்டார் வண்டிப் பந்தயங்களில் கலந்து கொண்டு பல பரிசுகளை இவர் பெற்றிருக்கிறார். இவருடைய குருவும் சிறந்த ஆலோசகரும் இவருடைய தகப்பனார் தான். அவரும் மிகச்சிறந்த மோட்டார்பந்தய நிபுணர். சினிமாப் படங்களில் கதாநாயகிகள் வேகமாக மோட்டாரை ஓட்டவேண்டிய கட்டம் படமெடுக்கப்படும் போது ஸடைன்தான் அமர்த்தப்படுகிறாள். ஜெர்மன் அடோமைல் கிளப்பின் ஆலோசகராக இவர் பணியாற்றுகிறார் பலருக்கு மோட்டார் ஓட்டக் கற்றுத் தருகிறார். இவ்வருடம் இவர் பத்து பந்தயங்களில் பங்கெடுத்துக்கொள்ள திட்டமிட்டிருக்கிறார். இவர் சீக்கிரமே வெளிநாடுகளில் சுற்றுப்பயணம் செய்யவிருக்கிறார்.

## கணக்கு போடும் இயந்திரம்

மேற்கு ஜெர்மனியிலுள்ள இந்நகரில் கணக்குபோடும் இயந்திரங்களின் கண்காட்சி ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இதிலுள்ள பெரிய இயந்திரம் ஒன்றின் மதிப்பு 40 லட்சம் ஜெர்மன் மார்க்குகள் (10 லட்சம் டாலர்கள்) எண்களைக் கூட்டும் இந்த இயந்திரம் பிரெஞ்சுக் கணித நிபுணர் பிளெய்ஸே பாஸ்கல் என்பவரால் 1642ல் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த இயந்திரங்கள் மிக மதிப்புள்ளவையென்று அக்காலத்திலேயே கருதப்பட்டால் இதை யாரும் எடுத்துக்கொண்டு போய்விடாமல் இருக்க இது மேஜையுடன் சங்கிலி போட்டு பிணைக்கப்பட்டு வந்தது. இந்நகரிலுள்ள இந்த பொருட்காட்சியில் இதைக் காணலாம். இந்தப் பொருட்காட்சி 1910ல் ஆரம்பிக்கப்பட்டது. 400 வருடங்களுக்குமுன் இதைக் கண்டுபிடித்தவர் இதைக் கொண்டு கூட்டிப்போட்ட பேரேடுகள் கொண்ட புத்தகத்தையும் இதில் காணலாம்.

## 89 வயதில் நீண்டதூரம் ஓடியவர்

முது வயதில் நீண்ட தூரம் ஓடக்கூடியவர்களின் அங்கம் ஒன்று மேற்கு ஜெர்மனியில் உள்ளது. இதில் 40 வயதுக்கு மேற்பட்டவர்களே அங்கத்தினர்களாகலாம். இதில் ஓட்டப்பந்தய நிபுணர்கள் பலர் அங்கத்தினர்களாக இருக்கின்றனர். இவர்களுக்காக நடைபெற்ற ஓட்டப்பந்தயத்தில் சமீபத்தில் வெற்றிபெற்றவர் 61 வயதுக்காரர். இந்த சங்கத்திலேயே மிகப்பெரியவர் 89 வயதுடைய ஆல்பிரட் ஹெல்பிரிச். [யூ.பி.எஸ்.]

## 9 அரிசி மில்கள்

தற்போதைய திட்டக் காலத்தில் தமிழ்நாட்டில் ஜில்லாக் கூட்டுறவு மொத்த விற்பனை சங்கங்கள் ரூ. 40, 50 லட்சம் செலவில் 9 அரிசி மில்களை நிறுவும் இத்திட்டத்தை மத்திய சர்க்கார் தயாரித்து அளித்துள்ளது.

திருச்சியில் இந்த அரிசிமில் நிறுவுவதற்கான இடத்தை தேர்ந்தெடுப்பது பற்றி திருச்சி ஜில்லா கூட்டுறவு சப்ளை மார்க்கெட்டிங் சங்கம் ஆராய்ந்து வருகிறது.

காஷ்மீரில்:

## 21 காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றி

காஷ்மீர் அசெம்பிளிக்கு 21 காங்கிரஸ் அபேட்சகர்கள் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டதாக அதிகாரபூர்வமாக அறுவிக்கப்பட்டுள்ளது.

இந்த அபேட்சகர்கள் காஷ்மீர் டிவிஷனிலிருந்து வெற்றி பெற்றனர். காஷ்மீர் டிவிஷன் 42 அசெம்பிளி ஸ்தாபனங்களைக் கொண்டது. ஆகையால் இங்கு பாக்கி 21 ஸ்தானங்களுக்கே தேர்தல் நடைபெறும்.

ஜம்மு, காஷ்மீர் அசெம்பிளி 75 ஸ்தானங்களைக் கொண்டது.

—

### வலங்கிமான் டி. மு. கோ.

O. S. 398/66

சு. குப்புசாமிபடையாச்சி—வாதி

கும்பகோணம் தாலூக்கா குமாரமங்கலம் மாதாகோவில் தெருவிலிருக்கும் செவஸ்தியான் குமாரர் சாமிநாதன் —1-ம் பிரதிவாதி

ஷை நம்பரில் வாதியால் உம்முடைய வகையரு பேரில் புரும்சரி நோட்டுப்படி துகை கிடைக்க வேண்டுமென்று தாவா செய்யப்பட்டு 31-1-67-ல் ஈரங்கி. தாவாவில் உமக்கு ஆக்ஷேபணையிருந்தால் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளவும்.

C. S. தேசிகாச்சாரி
1/7361/155 அட்வகேட்

### திருச்சி சப்கோர்ட்

S. C. 597/66

M/s. R. M. அய்யாத்துரை முத்துராஜா and G. S. கனி Partnership firm by managing partner R M. அய்யாத்துரை முத்துராஜா —வாதி

V. M. பெரியசாமி நாயக்கர் —பிரதிவாதி

ஷை நெம்பரில் வாதி, பிரதிவாதி பேரில் தேங்காய் வியாபார வரவு செலவு கணக்கில் பிரதிவாதியிடமிருந்து வரவேண்டிய துகை ரூ. 1136-க்கு தாவா துடர்த்து 4-2-67-ல் வாய்தா. அன்று ஆக்ஷேபணை உள்ளவர்கள் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

S. முத்துசாமி
2/7362/153 அட்வகேட்

## ஏவி. எம்.மின் புதிய படம்

சிவாஜி கணேசன் நடிக்கும் ஏவி. எம்மின் புதிய படத்தின் படபிடிப்பு தொடர்ந்து நடைபெறுகிறது. இதில் சிவாஜி கணேசனுடன் சிவகுமார், அசோகன், வி.கே.ராமசாமி, சுந்தரராஜன், நாகையா, சௌகார் ஜானகி, பாரதி, வாணிஸ்ரீ, மனோரமா மற்றும் பலர் நடிக்கின்றனர்.

கிருஷ்ணன் பஞ்சு டைரக்ஷனில் உருவாகும் இப்படத்தின் திரைக்கதை வசனத்தை ஜாவர் சீதாராமனும், இசையை எம்.எஸ் விஸ்வநாதனும், படபிடிப்பை சுந்தரமும், கலையை ஏ. கே. சேகரும் கவனித்து வருகின்றனர்.

### "அதே கண்கள்"

விரைவில் வெளிவரவிருக்கும் 'அதே கண்கள், வர்ணப் படத்திற்கான பாடல் காட்சிகள் படமாக்கப் பட்டன.

'பொம்பளெ ஒருத்தி இருந்தாளாம்
பூதத்தைபாத்து பயந்தாளாம்
ஆம்பளெ ஒருத்தன் இருந்தானும்
அவளுக்கு துணையா நடந்தானும்'

என்று ரவிச்சந்திரனும் நாகேஷும், காஞ்சனவையும் மாதவியையும் கேலி செய்கின்றனர்.

ரவிச்சந்திரன், காஞ்சனா, மாதவி, நாகேஷ், அசோகன், ராமதாஸ், ஏ. கருணாநிதி, கீதாஞ்சலி, ஜி சகுந்தலா, மற்றும் அநேகர் நடித்துவரும் இந்த விறுவிறுப்பூட்டும் விநோத சித்திரத்தின் கதையையும் டைரக்ஷனையும் ஏ.ஸி. திரிலோகசந்தரும், வசனத்தை டி. என். பாலுவும், இசையை வேதாவும், பாடல்களை வாலியும், படப்பிடிப்பை மாருதிராவும், கலையை ஏ. கே. சேகரும் கவனித்து வருகின்றனர்.

—

# அமைதிப்படை ஊழியருடன் ஒருநாள்

கல்லிட்டிப்பேட்டை ஒரு சிறு கிராமம், சென்னைக்கு 20 மைல் தெற்கே இருக்கிறது. ஹரிஜனங்கள் இங்கு வசிக்கின்றனர். ஒரு நாள் பிற்பகல். கிராமம் வெறிச்சென்று யாருமே அவ்வூரில் இல்லாததுபோல் காட்சியளித்தது. உழைக்கக்கூடிய பாட்டாளிகள் வேலைக்குச் சென்றிருந்தனர். பஞ்சாயத்து யூனியன் துவக்கப் பள்ளி ஒன்றுதான் சுறுசுறுப்புடன் காணப்பெற்றது. வகுப்புகள் பள்ளிக்குள்ளேயும் வெளியே தாழ்வாரத்திலும் ஒரு மரத்தின் அடியில் நிழலிலும் நடந்து கொண்டிருந்தன.

அப்பொழுது அங்கே காணப்பெற்றது ஒரே கட்டுமானப் பணிதான். அது பள்ளிக்கூடத்துக்குப் பக்கத்தில் நடந்துகொண்டிருந்தது. மூவர் சிமெண்டும் ஜல்லியும் கலந்து பள்ளிக்குப் பின்னால் தோண்டப் பெற்றிருந்த அடித்தளத்தில் கலவையைக் கொட்டிக் கொண்டிருந்தனர். தொழிலாளர்களுக்கு மேஸ்திரியாக இருந்தவர் ஒரு அமெரிக்க இளைஞர். இவரும் தொழிலாளர்களும் உரையாடிக் கொண்டது கை விரல் சங்கேதம் மூலம்தான். அவ்வப்பொழுது ஒன்றிரண்டு தமிழ் சொற்களும் ஆங்கிலச் சொற்களும் உதவி செய்யும்.

அமைதிப்படை ஊழியர் மைக்ரோமானிஸின் பென்ஸில்வேனியா மாநிலத்தைச் சேர்ந்தவர். பள்ளிக்கூடத்துக்கு அடுக்களையொன்றைக் கட்டிக் கொடுக்க அவர் அங்கு அனுப்பப்பட்டிருக்கிறார். சுத்தமான சிறந்த சுகாதார வழியிலே பள்ளிச்சிறார்களுக்கு இலவச மதிய உணவு தயாரிக்க பள்ளிக்கூடத்துக்கு இந்த அடுக்களை பயன்படும்.

செங்கல், சிமெண்ட், கருங்கல், மணல், தண்ணீர் குழாய், மரம், அஸ்பெஸ்டாஸ் ஷீட்டுகள் முதலிய கட்டுமானப் பொருட்களைச் சேர்த்து வைத்துக்கொள்ளவே கிராமத்துக்கு வந்து முதல் 3 வாரங்களில் பெரும் பகுதியையும் கழித்து விட்டார் ரொமானிஸின்.

‘இன்னும் ஒரு வாரத்தில் அடுக்களைக் கட்டி முடித்து விடுவேன்’ என்கிறார் அவர். ஒரு கதவுக்கும் ஒரு சாளரத்துக்கும் மரம் நன்கொடையாகத் தந்தார் பஞ்சாயத்து யூனியன் தலைவர். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஒரு பைசா முதல் எது தந்தாலும் வாங்கிக் கொள்ளப் பண வசூல் செய்கின்றனர் பள்ளிச் சிறார்கள் சென்னையில் இருக்கும் அமெரிக்க மாதர் சங்கமும் ஹரிஜன நல நிதியும், அடுக்களை கட்டும் செலவில் பெரும் பகுதியைத் தந்துள்ளன.

பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி டி. எஸ். தாட்சாயணி. புதிய அடுக்களைக் கட்டுப்படுத்துவதில் அவருக்கு மிகுந்த உற்சாகம். சமையலுக்கு அவர்கள் பயன்படுத்தி வந்த அடுக்களையின் கூரையை புயல் பிய்த்துக் கொண்டு போயிற்று; எனவே திறந்த வெளியில் அடுப்பு மூட்டி மதிய உணவு தயாரிப்பது கடினமாக இருக்கிறது; புதிய அடுக்களை வந்துவிட்டால் தொல்லை எல்லாம் தீரும் என்றார் அவர்.

முற்றத்துத் தோட்டத்துக்கு நிறைய தண்ணீர் கிடைக்கவும் வகைசெய்யும் புதிய அடுக்களை. அடுக்களையில் கை பம்பு ஒன்று அமைக்கப்படும். பக்கத்தில் இருக்கும் கிணற்றிலிருந்து தண்ணீரை இந்தப் பம்பு இறைக்கும். அடுக்களையிலே கிடைக்கும் தண்ணீர் பாத்திரங்களை கழுவவும் குழந்தைகள் தம் கைகளைக் கழுவவும் பயன்படுத்தப் படும். கழுவிய தண்ணீர் தோட்டத்திற்கு வடிகால் வழியாகக் கொண்டுபோகப் படும்.

இதற்கிடையே பள்ளித் தோட்டமும் விரிவாக்கப் படுகின்றது. இதை இன்னொரு அமைதிப்படை ஊழியர் செய்து வருகிறார். கரோல் கல்லெட் என்பது இப்பெண்மணியின் பெயர். வாஷிங்டன் நகரைச் சேர்ந்தவர். அன்று பிற்பகல் அவர் பள்ளியின் சற்று வயதான பிள்ளைகளுடன் தோட்டத்தைக் கொத்திக் கொண்டிருந்தார். கொத்தி விட்ட இடங்களைச் சுற்றிலும் கற்களை அடுக்கிக்கொண்டு வந்தார்.

‘இங்கே மண் மிகவும் கெட்டியாக இருக்கிறது’ என்றார் அவர். ஆயினும் பட்டாணி, கத்தரி, வெண்டை, இன்னும் பிற காய்கறிகளை, அடுக்களைத் தண்ணீர் வரத் தொடங்கியதும் பயிர் செய்யப்போவதாக அவர் கூறினார். காய்கறிகள், மதிய உணவுடன் சேர்த்துக் கொள்ளப்படும். இப்பொழுது 120 பையன்களுக்கும் பெண்களுக்கும் பள்ளியில் மதிய உணவு கொடுக்கப்படுகிறது.

தோட்டம் போடுவது, ஊட்டம் தரும் உணவு தயாரிப்பது முதலியவற்றை அவர் நேரில் காட்டுகிறார். அவருக்குத் தமிழ் பேச இன்னும் வரவில்லை. ஆனால் குழந்தைகள் பார்த்ததை உடனே செய்துவிடும் ஆற்றல் உள்ளவர்கள், தோட்டத்தில் தான் செய்வதைப் பார்த்து விரைவில் அதைக் கற்றுக் கொண்டுவிடுகின்றனர் என்றார் கரோல்.

ஊட்டச் சத்துக்கள் பற்றிய போதனைத் திட்டத்திற்கு, அந்த கிராமத்தில் இருக்கும் திருமதி எச். கே. ஃபிலிப் உதவி செய்கிறார். அவருடைய வீட்டில்தான் கரோல் தங்கியிருக்கிறார். திருமதி ஃபிலிப் ஊட்டச் சத்துத் துறையில் ஒரு நிபுணர். சல்லிப் பேட்டையில் அவர் ஓய்வுபெற்று வாழ்ந்து வருகிறார்

இவ்விரண்டு அமெரிக்க அமைதிப்படை ஊழியர்களுமே இவருடைய வீட்டில்தான் தங்கியிருக்கின்றனர். இவர்களுக்கு அறைகள் கொடுத்திருக்கிறார், திருமதி ஃபிலிப்ஸ். இரண்டு மரக் கட்டில்கள், மடக்கும் நாற்காலிகள், ஒரு மேசை, சில பீங்கான் சாமான்கள் முதலியவற்றையும் கொடுத்திருக்கிறார். இவர்களுக்கு பழக்கமான வசதிகள் ஏதும் இங்கில்லை. ஆயினும் இவர்கள் மிக எளிய வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். உணவுப் பொருள்கள் வாங்க இவ்விரண்டு பேர்களும் சில மைல்கள் தள்ளியிருக்கும் மார்க்கெட்டுக்குப் போக வேண்டும். கிராமத்துக்கு அருகே தாம்பேரதி ஒன்று இருக்கிறது. வெள்ளம் வந்தால் அவர்கள் இன்னும் சில அதிக மைல்கள் சுற்றிப் போகவேண்டியிருக்கும்.

ஆனால் அமைதிப் படையின் இலட்சியம்தான் என்ன? உலகிலே குடிசைகளிலும் கிராமங்களிலும் வாழ்பவர்கள்பால் அக்கறையும் இரக்கமும் காட்டுவதுதான் அது.

——

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

சிலம்புச் செல்வரும் ஆச்சாரியரும் காமராசருக்கு என்றுமே எதிரிகள் என்பது தமிழகம் நன்கு அறிந்த செய்தி. தமிழக வரலாற்றோடு நெருங்கிய தொடர்புடைய (கட்சிச் சார்பில்லாத) பெரியவர் ஒருவர் பின்வருமாறு கூறினார்:

காமராசர் அடைந்துவரும் பெருமைகளைப் பொறுகவர்கள் உலகத்திலேயே இரண்டுபேர்தான்: ஒருவர் இராசகோபாலாச்சாரியார்; மற்றவர் ம.பொ.சிவஞானம்' இது உண்மைதானே?

காமராசரை வீழ்த்த வேண்டுமென்ற நோக்குடனேயே, ஆச்சாரியர் தி.மு.க. வினரைத் தட்டிக் கொடுத்துவந்தார், தட்டிக் கொடுத்து வருகிறார் என்பதில் சந்தேகமில்லை. இந்த எதிரணி வலுவடைந்திருப்பதாக நம்பி, 'இதன் மூலமாகவாவது ஒருமுறை காமராசரை வீழ்த்திப் பார்த்து விட வேண்டும்' என்ற ஆசையிலே ம. பொ. சி. இந்தக் கூட்டணியில் போய்ச் சேர்ந்தாரோ?

அவர்கள் எப்படியாவது, எதற்காவது சேர்ந்துவிட்டுப் போகட்டும். நாம் நமது கடமையாகிய வாக்களிப்புக்கு வருவோம். கூட்டணிக் கட்சிகளைக் கொள்கையே இல்லாதவை என்று சொல்ல முடியாது. அவ்வப்போது, அங்கங்கே இக்கட்சிகள் தங்கள் கொள்கைகளில் பலவற்றைக் கைவிட்டு வந்திருந்தாலும் சிற்சில கொள்கைகளை இன்னும் வைத்துக் கொண்டே உள்ளன. அவை யாவும் ஒன்று சேர்ந்து செயற்பட முடியாது என்பது தவிர, அவர்களின் கொள்கையில் நாம் விமர்சிக்க வேறு குறை என்ன இருக்கிறது. அவரவரும் ஏதோ ஒரு கொள்கையை வைத்துக் கொள்ள எல்லாருக்கும் உரிமை இருக்கிறதே!

கூட்டணியர் எல்லோரும் முழக்கும் ஒரே கொள்கை, காங்கிரஸ் ஒழிப்பு, இதிலேதான் அவர்கள் அணிவரின் நோக்கும் ஒன்றுபடுகிறது.

ஏற்கனவே நாட்டை ஆண்டுவரும் காங்கிரஸ் கட்சியும் தேர்தலில் போட்டியிடுகிறது. அக்கட்சி, 'லஞ்சத்தை ஒழிப்போம், வறுமையை ஒழிப்போம், சமுதாய மேடு பள்ளங்களை ஒழிப்போம்' என்று (பேச்சுக்காவது) சொல்லிவருகிறதே தவிர, 'இந்தக் கட்சியை ஒழிப்போம், அந்தக் கட்சியை ஒழிப்போம்!, என்று சொல்லவில்லை.

நாட்டுமக்களாகிய நமக்குக் காங்கிரஸ் தோற்பது பற்றியோ எதிரணி தோற்பது பற்றியோ அக்கறை இல்லை. யார் ஆண்டாலும் அவர்கள் நம்மவர்களே. நமக்கு வேண்டியது, நாட்டிலே நல்லாட்சி. மாமியார் தீட்டினாலும் மருமகள் தீட்டினாலும், நமக்கு அரிசி வெளுக்கவேண்டும். ஆகையால், 'இவர்களில் உலக்கை பிடிக்கத் தக்கவர் யார்' என்பதே நமது சிந்தனை...

காங்கிரஸ் கட்சியின் பலமும் பலவீனமுமாக அதன் இருபதாண்டுச் சாதனைகள் உள்ளன. இந்த இருபது ஆண்டுகளில் அக்கட்சி செய்த தவறுகளும் உள்ளன (சுதந்திரத்துக்கு முந்திய காங்கிரஸ் இயக்கம் எல்லாருக்கும் பொதுவாகையால், இன்றைய காங்கிரஸ் கட்சி அந்த இயக்கத்தின் சாதனையைச் சொல்லிக் கொண்டு ஓட்டுக் கேட்பதாகாது...) தமிழகத்தைப் பொறுத்தவரை கல்வி, தொழில் முன்னேற்றம், நீர்ப்பாசனம், மின்சாரம், போக்குவரத்து முதலிய துறைகளில் காங்கிரஸ் சாதனைகளைப் புரிந்திருக்கிறது. அயல்மாநிலங்களெல்லாம் கண்டு பொறாமை கொள்ளத்தக்க சாதனைகள் அவை. பொருள்மய வாழ்வுக்கு இத்தனை செய்த காங்கிரஸ், மனிதனின் (தமிழ் மக்களின்) கலைவாழ்வுக்கு அதிகம் செய்யவில்லை; அடிப்படையான மொழி வளர்ச்சியிலும் அது செய்திருப்பது போதாது. ஒரு வேளை, வயிற்றுப் பெருமானைத் திருப்தி செய்துவிட்டு இதயப் பெருமானிடம் வரலாம் என்று காங்கிரஸ் ஆட்சி நினைத்திருக்கலாம். என்றாலும் இந்தத் திசையில், காங்கிரஸ் ஆட்சியில் நமது முன்னேற்றம் மிகவும் குறைவு என்பதை மறுக்க முடியாது.

லஞ்ச ஊழல், சாதி மதக் குறுக்கீடு போன்ற 'அகில இந்திய'க் குறைகளை நீக்குவதைப் பொறுத்தவரை தமிழக ஆட்சி சாதனை எதையும் புரிந்துவிடவில்லை. இதுவரை தேர்தல் காலங்களிலும் மந்திரி சபை அமைப்பிலும் காங்கிரஸ் கட்சி, நாட்டின் பொதுக் குறைகளுக்கு ஆட்பட்டே வந்திருக்கிறது. இலட்சியப் போக்கில் விரைந்து செல்லாமல், நாட்டின் நிலையோடு ஒட்டிய போக்கையே காங்கிரஸ் கடைப்பிடித்து வந்துள்ளது. சமுதாயக் கேடுகளோடு நேரிடையாக மோதிக் கொள்ளாமல், மக்களின் கல்வியும் பொருளாதார நிலையும் உயர்ந்தால் இந்தத் தீமைகள் குறையும் என்ற நோக்கிலேயே காங்கிரஸ் செயலாற்றி வந்திருக்கிறது ...

இதே சமயம் எதிரணியினரின் நிலை என்ன? அந்த அணியில் முன்நிற்பது தி. மு. கழகம்; அதற்குத் துணை நிற்பவற்றுள் பெரும்பாலானவை பிற்போக்குக் கட்சிகள். தி. மு கழகத்தின் சாதனை வரலாறு, அப்படி ஒன்றும் பிரமாதமாக இல்லை. இலட்சியச் சட்டைகளை மாற்றிக் கொண்டும் கழற்றிக் கொண்டும் வந்த நிகழ்ச்சிகளே தி. மு. கழகம் வரலாற்றில் பெரும்பகுதி.

சென்னை நகராட்சியில் தி. மு. க. வின் ஊழல்களைக்

கதைகதையாகச் சொல்லுகிறார்கள். சாதாரண நிலையிலிருந்த தி. மு. க. நகராட்சி உறுப்பினர்களெல்லாம் பணக்காரராயிருப்பதாகவும், எந்த வேலைக்கும் திட்டவட்டமான லஞ்சத் தொகை வசூலிக்கப்படுவதாகவும் பேச்சு அடிபடுகிறது. ஒரு தி. மு. க. உறுப்பினரிடம் ஒரு துறையின் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டால், மற்றொரு தி. மு. க. உறுப்பினரிடம் கூட லஞ்சம் வாங்காமல் அவர் காரியம் செய்வதில்லை என்று உள்வட்டாரங்களில் பேசப்படுகிறது!

ஆட்சிமொழிக் கொள்கையிலும், தி. மு. கழகம் சொல் வேறு செயல் வேறாகவே இருந்து வந்திருக்கிறது. 1965 ஆட்சிமொழிக் கிளர்ச்சியில் தங்களுக்கு யாதொரு சம்பந்தமும் கிடையாது என்று கையைக் கழுவிவிட்டு ஒதுங்கிக் கொண்டவர்களே தி. மு. க.க்கள். இவ்வாறு முக்கியமான கூட்டங்களில் முதுகைக் காட்டிவிட்டு, மேடையில் நெஞ்சு நிமிர்த்துவது தி. மு. க. வரலாற்றில் மிகச் சாதாரணமான நடைமுறை.

தி. மு. கழகம் சென்னைச் சட்டசபையில் எதிர்க்கட்சியாக இருந்தபோது சாதித்தவை என்று சொல்லுவதற்கும் எதுவுமிருப்பதாகத் தோன்றவில்லை. இவர்களும் மற்றும் சில எதிர்க்கட்சிக்காரர்களும், தங்கள் தங்கள் சொந்த இலாபங்களைக் கருதி, ஆளும் கட்சியிலுள்ளவர்களைச் சுற்றினார்கள் என்றே மக்கள் பரவலாகப் பேசினார்கள். பல முக்கியமான கூட்டங்களில் ஆளும் கட்சியின் குறைகளைச் சரிவரச் சுட்டிக் காட்டும் அளவுக்கு இவர்கள் உழைக்கவில்லை என்பது நாடறிந்த உண்மை.

தி. மு. க. வினர் இவ்வளவு காலமும் 'தமிழ் தமிழ்!' என்று மேடையில் முழங்கியது தவிர நேரிடையாகத் தமிழ் வளர்ச்சிக்குச் செய்தது ஒன்றுமில்லை. சுதந்திரத்துக்கு முன்பு காங்கிரஸ் இயக்கம் செய்து தேசீயமயச் செயல்முறைகளின் பணியிலோ வேறு வகையிலோ இவர்கள் தமிழ் வளர்ச்சித் திட்டம் எதையும் வகுத்துச் செயற்படுத்தவில்லை. (இந்திய முறைக் கல்வியை ஊட்டக் கல்வி நிலையங்களையும் குருகுலங்களையும் அமைத்ததோடு இந்தியப் பொருளாதார நிலக்கனிப்புகளையும் அவற்றுக்கேற்ற திட்டங்களையும் பழைய காங்கிரஸ் இயக்கம் வகுத்து வந்ததை யாரும் மறந்திருக்க முடியாது)

தமிழின் எதிர்காலத்தில் மட்டுமல்ல. அதன் இறந்த காலம் பேரிலக்கியங்களிடத்தும் தி.மு.க. வினருக்கு அக்கறையோ மதிப்போ இருந்ததில்லை. தமிழரின் அரிய செல்வங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தைப் பணநோக்கில் பூம்புகாராக்கி இலக்கியக் கொலை செய்தவர் இவர்களின் 'கலைஞர்'களிலே ஒருவரல்லவா? மேனாட்டாரின் 'பத்துக் கட்டளைகள்', 'பென்ஹர்' போன்ற திரையோவியங்கள், அவர்களுக்கு அவர்களின் பழமையிடம் உள்ள நாகரிக ஈடுபாட்டைக் காட்டுகின்றன. நமது பூம்புகாரோ?... இதிலே கலைஞர் நடத்திய கொலையை எந்தத் தி. மு. க. தலைவரும் கண்டிக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. அவர்களின் கலையே அவ்வளவு தானோ? அல்லது தமிழ்க் கலையிடம் அவர்கள் கொண்ட ஈடுபாடே அவ்வளவுதானோ?

'இதெல்லாம் 'வெளியே' இருக்கும்போது செய்தது, அதிகாரம் கையில் வந்தால் தமிழையே உயர்த்திவிடுவார்கள்' என்று நினைக்கலாம் என்றால், இவர்கள் ஆட்சிபெற்ற சென்னை நகராட்சி அதற்கும் குறுக்கே நிற்கிறது: 17—1—67 மித்திரன் இதழில் நகராட்சித் தமிழாசிரியர்களின் சார்பில் ஒரு நீண்ட கடிதம் வெளிவந்திருக்கிறது. இதிலுள்ள செய்திகளைப் பார்க்கையில், எந்த நிலையிலும் மற்ற ஆசிரியர்களை விடத் தமிழாசிரியர்களின் சம்பளம் குறைவாக இருக்கவேண்டுமென்பதிலேயே இவர்கள் கவனம் செலுத்தி வந்திருப்பதாகத் தெரிகிறது. தமிழின் பேராலேயே வளர்ந்த இவர்கள், தமிழுக்குத் தனிச் சிறப்பு வழங்காவிட்டாலும் மற்றவற்றோடு சரியாசனமாவது வழங்கியிருக்க வேண்டாமா? 'அதற்கெல்லாம் அவர்களுக்கு நேரம் எங்கே இருக்கிறது?' என்று சிலர் நமுட்டுச் சிரிப்புச் சிரிப்பதில் பொருள் இருப்பதாகத்தானே தெரிகிறது!

இந்தச் சூழ்நிலையில், வாக்காளர்களாகிய நமது பொறுப்பு என்ன? ஆட்சியில் அனுபவம் உள்ளவர்கள், செயலில் தீவிரம் இல்லாவிட்டாலும் கொள்கையில் சுத்தமானவர்கள் என்பதால் ஆட்சியைக் காங்கிரசிடமே ஒப்படைக்கப் போகிறோமா? அல்லது, இப்போதும் தேர்ந்தெடுத்துவிட்டால் தங்களை அசைக்க முடியாது என்ற நம்பிக்கையால் காங்கிரஸ்காரர்கள் தவறுகளைத் துணிந்து செய்வார்கள் என்று கருதி அவர்களைத் தோற்கடிக்கப் போகிறோமா? ஒரே ஆட்சியில் எவ்வளவு காலம்தான் இருப்பது, ஒரு மாறுதல் வேண்டாமா என்று எதிரணியிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்கப் போகிறோமா? அல்லது, இவர்கள் ஆட்சிக்கு வந்தாலும் முதல் சில ஆண்டுகள் தங்கள் 'தியாகி'களைத் திருப்திப் படுத்திவிட்டுத்தானே. மக்களை நினைக்கப் போகிறார்கள் என்று கருதி அவர்களைத் தோற்கடிக்கப் போகிறோமா?...

இத்தனைக்கும் மத்தியில் இன்னும் ஒன்று இருக்கிறது இன்றைய நிலையில், காங்கிரசின் தோல்வி காமராசரின் தோல்வி மட்டுமல்ல; தமிழகத்தைப் பொறுத்தவரை அது இராசகோபாலாச்சாரியாரின் வெற்றி. அதேபோல் காங்கிரசின் வெற்றி காமராசரின் வெற்றி மட்டுமல்ல; இராசகோபாலாச்சாரியாரின் சொந்தத் தோல்வி. இதையும் தமிழ் மக்கள் சிந்திக்க வேண்டும். 'இரண்டு தனிமனிதர்களைச் சுற்றியேதான் நமது குடியாட்சி என்றென்றும் கும்மியடிக்கவேண்டுமா?' என்பதையும் வாக்காளர்களாகிய நாம் சிந்திக்க வேண்டும்.

——

## ஆழக்கிணறு

சோவியத் யூனியனின் ஐரோப்பியப் பகுதியின் வடக்கே கோலா தீபகற்பத்தில் 15 கிலோ மீட்டர் ஆழத்திற்கு, பூமியினுள்ளே குடைவதற்கான கருவிகள் தயாராக உள்ளன.

பூமியின் உட்பகுதி பற்றிய ஆராய்ச்சிக்கு இது பெரிதும் உதவும். — டாஸ்



Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.